மெய்கண்ட தேவநாயனார்

அருளிச்செய்த

# சிவஞானபோதமும்

## வார்த்திகப் பொழிப்பும்

பதிப்பாசிரியர்கள் :

க. வச்சிரவேல் முதலியார்

ச. கங்காதரன்




சைவசித்தாந்தத் தத்துவத்துறை

மதுரைப் பல்கலைக் கழகம்

மதுரை - 625021

மெய்கண்ட தேவநாயனுர்

அருளிச்செய்த

# சிவஞானபோதமும்

(1227-ஆம் ஆண்டு - 3-ஆம் [illegible] காலம்)

## வார்த்திகப் பொழிப்பும்

பதிப்பாசிரியர்கள் :

கு. வச்சிரவேல் முதலியார்

ச. கங்காதரன்

சைவசித்தாந்தத் தத்துவத்துறை

மதுரைப் பல்கலைக் கழகம்

மதுரை - 625021

1978

சிவமயம்

# முன்னுரை



சைவசித்தாந்தத்தின் ஆழ்ந்த தெளிந்த உண்மைகளை விளக்கும் நூல சிவஞான முனிவர் செய்துள்ள சிவஞான பாடியமே ஆகும. ஆதலினால் அப்பாடியத்தின் பொருள் நிலையைக் கலலூரிகளில் தமிழ் மொழியினை அல்லது தத்துவக் கொள்கைகளை மாணவர்களுக்கு உணர்த்திவரும் ஆசிரியர்கள் விளங்க அறிந்து கொள்ளுதல் இன்றியமையாதது. இந்த நோககத்துடன் பலகலைக்கழகப் பொருள் உதவு குழுவின் ஆதரவினால் மதுரைப்பல்கலைக் கழகத்தின் சைவசித்தாந்தத் துறையின் சார்பில் இவவாண்டு (1978) மே 3முதல மே23 வரை உள்ள நாட்களில் வேனிற்கால வகுப்பு நடத்தப் பெறுகிறது. அதிற் கலந்துகொள்ளும் ஆசிரியர்கள் பேருரையின் மூலமாக உள்ள சூத்திரங்கள் இவை என்பதை யும், அவற்றிற்கு மெய்கண்டதேவர் அருளிச் செய்துள்ள கருத்துரை, பொழிப்புரை என்பவை இன்னவை எனவும் புரிந்து கொள்ளுதறபொருட்டு இந்நூல் தனியாக வெளியிடப் படுகிறது.

பாடியம் எனப்படும் பேருரை சூத்திரங்களுக்கு மெய்-கண்டதேவர் அருளிச்செய்துள்ள கருத்துரை, வார்த்திகம் என்பவற்றின் விளக்க உரையும் தந்துயையுமாகவே அமை கின்றது. இப்பாகு பாட்டை நன்கு உணர்ந்து பேருரையைப் படிப்போர்க்கே அதன்கண் உள்ள பொருள் அமைதி கருத்தில்

அடங்கித்தோன்றும ஏனையர் பண்டைக்காலப் புலவர்கள் கூற்றின்படி குன்று முட்டிய குரீஇப்போலவும, குறிச்சி புக்க மான் போலவும் இடர்ப்படுவர். இக்காரணம் பற்றிப் பாடியத்தைப்பயிலப் புகுவோர் மூலபாடங்களை வரையறை செய்து மனத்திற் கொள்வதற்குத் துணையாகச் சிவஞானபோதமும், அதன் வார்த்திகமும், சிறப்புப் பாயிரங்களும் இவ்வெளியீட்டின்கண் தரப்படுகின்றன.

சைவசித்தாந்தத்துறை
மதுரைப்பல்கலைக்கழகம்
மதுரை-625021,
10-4-1978

**க. வச்சிரவேல் முதலியார்,**
தனி அலுவலர்,

**ச. கங்காதரன்,**
விரிவுரையாளர்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

மெய்கண்டதேவ நாயனார்

அருளிச்செய்த

# சிவஞானபோதம்



## பாயிரவியல்

### மங்கல வாழ்த்து

கல்லால் நிழன்மலை
வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே.

### அவையடக்கம்

தம்மை உணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
எம்மை யுடைமை எமையிகழார்—தம்மை
உணரார் உணரார் உடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.

உ

சிவமயம

திருச்சிற்றம்பலம்

# சிறப்புப் பாயிரம்



மலர்தலை யுலகின் மாயிருள் துமியப்
பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போல் ஈண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகண்
ணிருள்தீர்ந்(து)
அருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
உயர்சிவ ஞான போதம் உரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணைச் சுவே
தவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே.

திருச்சிற்றம்பலம்



# 1. பொதுவதிகாரம்

—o—

## 1. பிரமாணவியல்

### முதற் சூத்திரம்

அவன் அவள் அதுவெனும் அவைமூ வினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர்

என்பது சூத்திரம்.

**கருத்துரை :**

என்னுதலிற்றோ எனின், சங்கார காரணனாயுள்ள முதலையே முதலாகவுடைத்து இவ்வுலகம் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

**உரைவகை**

இதன் பொழிப்பு உரைத்துக்கொள்க.

**வார்த்திகப் பொழிப்பு**

முதல் அதிகரணம்

***மேற்கோள் :***

ஈண்டு, உளதாய் ஒருவன் ஒருத்தி ஒன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத்தென்றது:

***ஏது:***

தோற்றமும் ஈறும் உள்ளதன் பாலே கிடத்தலின்.

***உதாரணம் :***

பூதாதி ஈறும் முதலுந் துணையாகப்
பேதாய் திதியாகும் பெற்றிமையின் – ஓதாரோ
ஒன்றொன்றிற் றோன்றி உளதாய் இறக்கண்டும்
அன்றென்றும் உண்டென்ன ஆய்ந்து.

## இரண்டாம் அதிகரணம்

*மேற்கோள் :*

இனி ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை யென்றது:

*ஏது :*

இல்லதற்குத் தோற்ற மின்மையின், உள்ளதற்குச் செயவோரின்றிச் செய்வினை யினமையின்.

*உதாரணம் :*

இலயித்த தன்னிலில யித்ததாம லத்தால்
இலயிதத வாறுளதா வேண்டும்—இலயித்த(து)
அத்திதியி லென்னின் அழியா(து) அவையழிவ(து)
தத்திதியும் ஆதியுமாம் அங்கு.

வித்துணடா மூல முளைத்தவா தாரகமாம்
அத்தனதாள் நிற்றல அவர்வினையால்—வித்தகமாம்
வேடடுவனும் அப்புழுபபோல் வேணடுருவைததான் [கொடுததுக்
கூட்டானே மண்போற் குளிர்ந்து.

நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்தின்
தாககாது நின்றுளத்திற் கண்டிறைவன்—ஆக்காதே
கண்ட நனவுணர்விற் கணட கனவுணரக்
கண்டவனின இறந்தின்றுங் கட்டு.

## மூன்றும் அதிகரணம்

*மேற்கோள் :*

இனிச் சஙகாரமே முதலென்றது:

*ஏது:*

சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரததின வழியல்லது சுதந்திரமின்றி நிற்றலான்.

*உதாரணம் :*

ஒன்றலா ஒன்ருல் உளதாகி நின்றவா(று)
ஒன்றலா ஒன்றில்அவை ஈருதல்—ஒன்றலா
ஈறே முதல்; அதனின் ஈறலா ஒன்றுபல
வாறே தொழும்பாகும் அங்கு.

## இரண்டாம் சூத்திரம்

அவையே தானே யாய்இரு வினையின்
போக்கு வரவு புரிய ஆணையின்
நீக்க மின்றி நிற்கு மன்றே

என்பது சூத்திரம்.

### கருத்துரை :

என்னுதலிற்றோ எனின், புனருற்பவம் வருமாறுணர்த்துதல் நுதலிற்று.

### வார்த்திகம்

### முதல் அதிகரணம்

*மேற்கோள் :*

ஈண்டு இவ்வாண்மாக்கள் பலவும் முதல்வன் தானேயாய் நிற்குமென்றது:

*ஏது:*

அத்துவிதமென்ற சொல்லானே ஏகமென்னில் ஏகமென்று சுட்டுதுண்மையின், அத்துவிதமென்ற சொல்லே அன்னிய நாத்தியை யுணர்த்துமாயிட்டு.

*உதாரணம் :*

கட்டும் உறுப்புங் கரணமுங் கொண்டுள்ளம்
இட்டதொரு பேரமைக்க எனனென்றுங்—கொட்டி
அவன்உள மாகிலலான் உளமஅவ னுமாட்டா(து)
அவனுளமாய் அல்லனுமாம் அங்கு.

ஒனறென்ற தொன்றேகாண ஒன்றே பதிபசுவாம்
ஒன்றெனற நீபாசத தோடுளைகாண்—ஒன்றினருல்
அக்கரஙகள் இன்ரும் அகர உயிரின்றேல்
இக்கிரமத் தென்னும் இருக்கு.

பண்ணையும் ஓசையும் போலப் பழமதுவும்
எண்ணும் சுவையும்போல் எங்குமாம்-அண்ணல்தான்
அத்துவித மாதல் அருமறைகள் ஒன்றென்ளு (து)
அத்துவித மென்றறையும் ஆங்கு.

அரக்கொடு சேர்த்தி யணைத்த அக் கற்போல்
உருக்கி உடங் கியைந்து நின்று—பிரிப்பின்றித்
தானே உலகாம் தமியேன் உளம்புகுதல்
யானே யுலகென்பன் இன்று.

## இரண்டாம் அதிகரணம்

*மேற்கோள் :*

இனி, இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வன் ஆணையின் வருமென்றது:

*ஏது :*

ஒரு நகரியைக் காப்பான் பாடிகாவலிட்டாங்கு அவை அவனதாக்கினை யாகாலான்.

*உதாரணம் :*

உள்ளதே தோற்ற உயிரணையும் அவ்வுடலின்
உள்ளதாம் முற்செய்வினை உள்ளடைவே —
வள்ளலவன்
செயபவர் செய்திட் பயன்விளைக்குஞ் செய்யேபோற்
செய்வன் செயலணையா சென்று.

அவ்வினையைச் செய்வதனில் அவ்வினைஞர் தாஞ்-
சென்றங
கவ்வினையைக் காந்த பசாசம்போல்—அவ்வினையைப்
பேராமல் ஊட்டும் பிரானின் நுகராரேல்
ஆர்தாம் அறிந்தணைபபார் ஆஙகு.

நெல்லிற் குமியும் நிகழ்செம்பி னிற்களிம்பும்
சொல்லிற் புதிதன்று தொன்மையே—வல்லி
மலகன்மம் அன்றுளவாம் வள்ளலாற் பொன்வாள்
அலர்சோகஞ் செய்கமலத் தாம்.

## மூன்றும் அதிகரணம்

**மேற்கோள் :**

இனி இவ்வான்மாக்கள் மாறிப்பிறந்து வருமென்றது:

**ஏது:**

தோற்றமும் ஈறும் உள்ளதற் கல்லது உளதாதல் இன்மையான்.

**உதாரணம் :**

கண்ட நனவைக் கனவுணர்வில் தான்மறந்து
விண்படர்ந்தத் தூடு வினையினற்-கண்செவிகெட்(டு)
உள்ளதே தோற்ற உளம்அணுவாய்ச் சென்றுமனம்
தள்ள விழுங்கருவிற் ருன்.
அரவுதன் தோலுரிவும் அக்கனவும் வேறு
பரகாயம் போய்வருமப் பண்பும்—பரவில்
குடாகாய ஆகாயக் கூத்தாட்டம் என்ப(து)
அடாதுள்ளம் போமா் றது.

## நான்காம் அதிகரணம்

**மேற்கோள் :**

இனி நீக்கமின்றி நிற்கும்ன்றே யென்றது:

**ஏது :**

அவன் ஏகானேகம் இரண்டுமின்றிச் சருவவியா பியாய் நிற்றலான்.

**உதாரணம் :**

எங்குமுளன் என்றளவை ஒன்றன் றிரண்டென்னில்
எங்கு முளனன் றெவற்றெவனும்—அங்கண்
அவையவ னன்றில்லைப் பொன்னொளிபோல் ஈசன்
அவையுடைமை ஆளாம்நாம் அங்கு.

## மூன்ரும் சூத்திரம்

உளதில தென்றலின் எனதுட லென்றலின்
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலிற் கண்படில்
உண்டிவினை யின்மையின் உணர்த்த உணர்தலின்
மாயாஇயந்திர தனுவினுள் ஆன்மா

என்பது சூத்திரம்.

### கருத்துரை

என்னுதலிற்ருே எனின், ஆன்மப் பிரகாசம் உணர்த்துதல் நுதலிற்று.

### வரர்த்திகப் பொழிப்பு

### முதல் அதிகரணம்

**மேற்கோளின் விளக்கம் :**

ஈண்டு இலதென்றலின் ஆன்மா உளதென்றது. எவற்றினையும் அன்றன்று என விட்டு ஆன்மா இலதென்று நிற்பது உளனாகலின் அதுவே அவ்வான்மாவசம் என்றது.

**உதாரணம் :**

அன்றன் றெனநின் றனைத்தும்விட் டஞ்செழுத்தாய்
நின்ருென் றுளததுவே நீ அனைத்தும் - நின்றின்று
தர்ப்பணமபோற் காட்டலாற் சார்மாயை நீயல்லை
தற்பரமும் அல்லை தனி.

### இரண்டாம் அதிகரணம்

**மேற்கோளின் விளக்கம் :**

இனி எனதுடலென்றலின் ஆன்மா உள தென்றது

என்பதி என்மனே என்ருற் போல, என்கை என் கால் என நிற்பதுளதாகலின், அதுவே அவ்வான்மாவாம் என்றது,

உதாரணம் :

எனதென்ற மாட்டின் எனதலா தென்னுது
உனதலா துன்கைகால் யாக்கை-எனதென்றும்
என்னறிவ தென்றும் உரைத்துநீ நிற்றிகாண்
உன்னிலவை வேரும் உணர்.

## மூன்ரும் அதிகரணம்

**மேற்கோளின் விளக்கம் :**

இனி ஐம்புலனறிதலின் ஆன்மாவுள தென்றது, ஐம்புலனுகிய சத்த பரிச ரூப ரச கந்தங்களே இந்திரியங்கள் ஒன்றறிந்த தொன்றறியாமையின இவ்வைந்திஞலும் ஐம்பயனும அறிவதுளதாகலின் அதுவே அவ் வான் மாவாம் என்றது.

உதாரணம் :

ஒன்றறிந்த தொன்றறியா தாதி உடல்மன்னி
அன்றும் புலனுய அஞ்செழுத்தை-ஒன்றறிதல்
உள்ளதே யாகில் அதுநீ தனித் தனிகண்(டு)
உள்ளலவை யொன்றல்லே ஓர்.

## நான்காம் அதிகரணம்

**மேற்கோளின் விளக்கம் :**

இனி ஒடுக்கமறிதலின் ஆன்மா உளது என்றது, நனவின்கண் கனவு கண்டாமென்றும் கண்டிலமென்றும் நிற்பதுளதாகலின், அதுவே அவ்வான்மாவாமென்றது.

உதாரணம் :

அவ்வுடலின் நின்றுயிர்ப்ப ஐம்பொறிகள் தாம் கிடப்பச்
செவ்விதின் அவ்வுடலிற் சென்றடங்கி-அவ்வுடலின்
வேருென்று கொண்டு விளேயாடி மீண்டதனே
மாறலுடல நீயல்லே மற்று.

## ஐந்தாம் அதிகரணம்

**மேற்கோளின் விளக்கம் :**

இனிக் கண்படில் உண்டி வினையின்மையின் ஆன்மா உளது என்றது ஒடுங்கினவிடதது இன்பததுன்பம் சீவனம் பிரகிருதிக் கின்மையின், ஒடுங்காதவிடத்து இன்பத்துன்பம் சீவியா நிற்பதுளதாகலின், அதுவே அவ்வான்மாவாம் என்றது.

**உதாரணம் :**

கண்டறியும் இவவுடலே காட்டொடுங்கக் காணுதே
உண்டி வினையின்றி உயிர்ததலாற்-கணடறியும்
உள்ளம்வே றுண்டாய் ஒடுங்கா(து) உடல்நணணில்
உள்ளதாம் உணடிவினை யூன்.

## ஆரும் அதிகரணம்

**மேற்கோளின்விளக்கம் :**

இனி உணர்த்த உணர்தலின் ஆன்மா உளதுஎன்றது, அவன் அறிந்தாங் கறிவன் ஏன்றறிவிக்க உபதேசியாய் நிற்பதுளதாகலின், அதுவே அவ்வான்மாவாம் என்றது,

**உதாரணம் :**

அறிந்தும் அறிவதே ஆயும் அறியா(து)
தறிந்ததையும் விட்டங் கடங்கி - அறிந்த(து)
எதுஅறிவும் அன்ருகும் மெய்கண்டான் ஒன்றின்
அதுவதுதான் என்னும் அகம்.

## ஏழாம் அதிகரணம்

**மேற்கோள் :**

இனி, மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளது என்றது:

**ஏது :**

அவைதாம் வெவ்வேறு பெயர்பெற்று நிற்றலான்.

**உதாரணம் :**

கலையாதி மண்ணந்தங் காணில்அவை மாயை
நிலையாவாம் தீபமே போல - அலையாமல
ஞானத்தை முன்னுணர்ந்து நாடில்அது தனுவாம்
தானததின் வேருகுந் தான.

# 2. இலக்கணவியல்

## நான்காம் சூத்திரம்

அந்தக் கரணம் அவற்றினென் றன்றவை
சந்தித்தது ஆன்மாச் சகமலத் துணரா(து)
அமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே

என்பது சூத்திரம்.

**கருத்துரை:**

என்னுதலிற்றோ வெனின், இதுவுமது.

**வார்த்திகப்பொழிப்பு**

## முதல் அதிகரணம்

**மேற்கோள்:**

ஈண்டு, இவ்வான்மாவாவது, அந்தக்கரணங்களாயுள்ள மனோ புத்தி யகங்கார சித்தங்களிலொன்றன் றென்றது:

**ஏது:**

அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்.

**உதாரணம்:**

மனமாதி யாலுணர்தல் முன்னூர் புலன்கள்
மனமாதி மன்புலனின் அல்லன் -மனமேல்
உதித்தொன்றை உள்ளம் உணர்தல் அதனின்
உதிக்குங் கடற்றிரையை யொத்து.

சிந்தித்தாய்ச் சித்தம் தெளியாதாய் ஆங்காரம்
புந்தியாய் ஆய்ந்து மனமாகிப் -பந்தித்து
வெவவேறு தானே துணிந்துள்ளம இவ்வேரும்
அவ்வேரும் போதுபோல் ஆங்கு.

அகார உகாரம அகங்காரம் புத்தி
மகாரம் மனம்சித்தம் விந்துப் —பகாதிவற்றை
நாதம் உளவடிவாம் நாடிற் பிரணவமாம்
போதம் கடற்றிரையே போன்று.

எண்ணில வோங்காரத்து ஈசர் சதாசிவமாம்
நண்ணிய விந்துவொடு நாதத்துக் —கண்ணின்
பகரயன்மா லோடு பரமன் அதிதெய்வம
அகரஉக ரம்மகரத் தாம்

## இரண்டாம் அதிகரணம்

**மேற்கோள்:**

இனி, இவவான்மாச் சகச மலத்திறைல் உணர்வின் றென்றது:

**ஏது:**

அதுதான் ஞானதிரோதகமாய் மறைத்துக் கொடு நிற்றலான்.

**உதாரணம்:**

*மாயா தனுவிளக்கா மற்றுள்ளங் காணுதேல்*
ஆயாதாம ஔறைற அதுவதுவாய்— வீயாத
வன்னிதனைத் தன்னுள் மறைத்தொன்றுங் காட்டம் போல்
தன்னைமலம் அன்றணைதல் தான்.

## மூன்றும் அதிகரணம்

**மேற்கோள்:**

இனி, இவ்வான்மாச் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீதமாயுள்ள ஞ்சாவத்திதஙய் நிற்கும எனறது:

**ஏது:**

அதுதான மல சொருபத்தின் மறைந்து அருபசொரூபி யாய நிற்றலான்.

**உதாரணம்.**

ஒன்றணையா மூலத் துயிரணையும் நாபியினிற்
சென்றணையும சித்தம் இதயதது மன்றவேய்
ஐயைந்தாம் நன்னுதலிற் கண்டத்து வாக்காதி
மெய்யாதி விட்டகனறு வேறு.

இலாடத்தே சாக்கிரததை எய்திய உள்ளம்
இலாடததே ஐந்தவததை எயதும்—இலாடத்தே
அவ்வவ இந்திரியத் தததுறைகள் கணடதுவே
அவ்வவற்றின நீஙகலது ஆங்கு.

## ஐந்தாம் சூத்திரம்

விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு
அளந்தறிந் தறியா ஆங்கவை போலத்
தாந்தம் உணர்வின் தமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே

என்பது சூத்திரம்.

கருத்துரை :

என்னுதலிற்றோ எனின், இவ்வான்மாக்களிடத்துத் தமது முதலுபகாரம் உணர்த்துதல் நுதலிற்று.

## வார்த்திகப் பொழிப்பு

## முதல் அதிகரணம்

**மேற்கோள்:**

ஈண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவால் உணரும் என்றது:

**ஏது:**

அவற்றினுன் ஆன்மா ஏற்றித்துக் காணினல்லது அவை ஒன்றையும் விடயியா வாகலான.

**உதாரணம்:**

ஐம்பொறியை ஆண்டங்கு அரசாய் உளமறிப
ஐமபொறிகள் உள்ளம் அறியாவாம - ஐம்பொறியின்
காணுதேற காணுது காணுமுளங் காணுதேற
காணுகண் கேளா செவி.

## இரண்டாம அதிகரணம்

**மேற்கோள்:**

இனி, இதுவுந் தமது முதலாலே உணரும் என்றது:

**ஏது:**

இவ்வான்மாத் தன்னுலே உணரும் இந்திரியங்களைப் போலத் தானுந் தன்னை உணராது நிற்றலான்.

மன்னுசிவன் சன்னிதியின் மற்றுலகஞ் சேட்டித்த(து)
என்னு மறையின் இயல்மறந்தாய்—சொன்னசிவன்
கண்ணு உளம் வினையாற் கண்டறிந்து நிற்குங்காண்
எண்ணுன் சிவன் அசத்தை இன்று.

வெய்யோன் ஒளியில் ஒடுங்கி விளங்காது
வெய்யோனை யாகாத மீன்போல—மெய்யவனிற்
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனைக்
கண்டுடனுய் மன்னுதலைக் காண்.

அருளுண்டாம ஈசற்(கு) அதுசத்தி யன்றே
அருளும் அவனன்றி இல்லை—அருளின்(று)
அரனன்றே இல்லை அருட்கண்ணர் கண்ணுக்(கு)
இரவிபோல் நிற்குமரன் எய்ந்து.



## ஆறாஞ் சூத்திரம்

உணருரு அசத்தெனின் உணரா தின்மையின்
இருதிற னல்லது சிவசத் தாமென
இரண்டு வகையின் இசைக்குமன் னுலகே

என்பது சூத்திரம்.

கருத்துரை :

என்னுதலிற்றோ எனின், சத்தும் அசத்தும் வரைசெய் துணர்த்துதல நுதலிற்று.

### வார்த்திகப் பொழிப்பு

### முதல் அதிகரணம்

**மேற்கோள் :**

ஈண்டு, அறிவினால் அறியப்பட்ட சுட்டு அசத்தென்றது:

**ஏது :**

அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்.

**உதாரணம் :**

அசத்தறியாய் கேள்நீ அறிவறிந்த எல்லாம்
அசததாகும மெய்கண்டான் ஆயின்—அசத்தலாய்
நீரில் எழுத்தும நிகழ்கனவும் பேய்த்தேரும
ஓரின்அவை இன்றாமா றொப்பு.

### இரண்டாம் அதிகரணம்

**மேற்கோள் :**

இனி, இவ்விரண்டு தன்மையுமின்றி, வாக்கு மனாதீத கோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவம் என்று உணரற்பாற்று:

**ஏது :**

பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்க வேண்டுவதின்மையானும், அப்பிரகாசத்தினுக்குப் பிரகாசம் இன்மையானும்.

உதாரணம் :

எண்ணிய சத்தன் றசத்தன்றும் என்றல்என்
கண்ணி உளதென்றல் மெயகண்டான்—எண்ணி
அறிய இரண்டாம் அசத்தாதல் சத்தாம்
அறிவறியா மெய்சிவன்தா ளாம்.

உணர்ப அசத்தாதல் ஒன்றுணரா(து) ஒன்றை
உணரும்நீ தானுணரா யாயின்—உணருமுனிற்
றுனிரண்டாம் மெய்கண்டான் தன்னு லுணர்தலாற்
றுனிரண்டாய்க் காணுன் றமி.

பாவகமேல் தானசத்தாம் பாவனு தீதமெனிற்
பாவகமாம் அன்றென்னிற் பாழதுவாம் - பாவ
கத்தைப்
பாவித்தல் தானென்னிற் பாவகமாம் தன்னருளாற்
பாவிப் பதுபரமில் பாழ்.

அறிய இரண்டல்லன் ஆங்கறிவு தன்னுல்
அறியபடான அறிவி னுள்ளான்—அறிவுக்குக்
காட்டாகி நின்றுனைக் கணணறியா மெய்யென்னக்
காட்டா தறிவறிந்து கண்டு.

அதுவென்னு மொன்றன் றதுவன்றி வேறே
அதுவென றறியறிவு முணடே—அதுவென்(று)
அறிய இரண்டல்லன ஆங்கறிவுள் நிற்றல்
அறியுமறி வேசிவமு மாம.

திருச்சிற்றம்பலம்.



# 2. உண்மை அதிகாரம்

—0—

## 3. சாதனவியல்

ஏழாம் சூத்திரம்

யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின்
சத்தே அறியா(து) அசத்தில தறியா(து)
இருதிறன் அறிவுள திரண்டலா வான்மா

என்பது சூத்திரம்.

கருத்துரை.

என்னுதலிற்றோ எனின், மேலதற்கோர் புறன் அடை யுணர்த்துதல் நுதலிற்று.

வார்த்திகப்பொழிப்பு;

முதல் அதிகரணம்

**மேற்கோள் :**

ஈண்டுச் சத்தினிடத்து அசத்துப்பிரகாசியா தென்றது:

**ஏது :**

மெய்யினிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலான்.

**உதாரணம் :**

அன்னியமி லாமை அரற்கொன் (று) உணர்வின்றும்
அன்னியமி லான அசததைக் காண்குவனேல-
அன்னியமாக்
காணுன் அவன்முன் கதிர்முன் னிருள்போல
மாணு அசத்தின்மை மற்று.

இரண்டாம் அதிகரணம்

**மேற்கோள்;**

இனி, அசத்தினுக்கு உணர்வின்று என்றது:

**ஏது :**

அது தான் நிருபிக்கில் இன்றாகலான்.

உதாரணம் :

பேய்த்தேர்நீ ரென்றுவரும் பேதைக்கு மற்றணைந்த
பேய்த்தேர் அசத்தாகும் பெற்றிமையின் —
வாய்த்ததனைக்
கண்டுணர்வார் இல்வழியிற் காணும் அசத்தின்மை
கண்டுணர்வார் இல்லதெனக் காண.

## மூன்றும் அதிகரணம்

மேற்கோள் :

இனி, இருதிறன் அறிவுள திரண்டலா ஆன்மா என்றது :

ஏது :

இவ்விரண்டினையும் அறிவதாய், உபதேசியாய் நின்ற அவ்வறிவு இரண்டன்பாலும் உளதாயுள்ள அதுவே அவ்வான்மாவாம் என்றது.

உதாரணம் :

அருவுருவந் தான்அறிதல் ஆயிழையாய் ஆன்மா
அருவுருவஃ தன்றாகும் உண்மை - அருவுருவாய்த்
தோன்றியுடன் நில்லாது தோன்றாது நில்லாது
தோனறல் மலர்மணம்போல் தொகு.

மயக்கம துற்றும் மருந்தில் தெளிந்தும்
பெயர்த்துணர்நீ சத்தாகாய் பேசில - அசத்துமலே
நீயறிந்து செய்வினைகள் நீயன்றி வேறசத்துத்
தானறிந்து துய்யாமை தான்.

மெய்ஞ்ஞானந் தன்னில் விளையா(து) அசத்தாதல்
அஞ்ஞானம் உள்ளம் அணைதல்காண் - மெய்ஞ்ஞானம்
தானே உளஅன்றே தண்கடல்நீர் உப்புப்போல்
தானேய் உளம்உளவாத் தான்.

## எட்டாம் சூத்திரம்

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே

என்பது சூத்திரம.

### கருத்துரை

என்னுதலிற்றோ எனின், ஞானத்தினை உணரும் முறைமையினை உணர்த்துதல் நுதலிற்று.

### வார்த்திகப் பொழிப்பு

### முதல் அதிகரணம்

**மேற்கோள்:**

ஈண்டு இவவான்மாக்களுக்கு முற்செய்தவத்தான் ஞானம் நிகழும் என்றது:

**ஏது:**

மேற்சரியை கிரியா யோகங்களைச் செய்துழி, நன்னெறி யாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோட்சத்தைக் கொடா ஆகலான்.

உதாரணம்:

தவஞ்செயதார் என்றுந் தவலோகஞ் சார்ந்து
பவஞ்செய்து பற்றறுப்பா ராகத்—தவஞ்செய்த
நற்சார்பில வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்
கற்றோர்சூழ் சொல்லுமாங் கண்டு.

பசித்துண்டு பின்னும் பசிபபானை ஒக்கும்
இசைத்து வருவினையில் இன்பம—இசைத்த
இருவினை ஒப்பில் இறப்பில தவத்தான
மருவுவனும ஞானத்தை வந்து.

## இரண்டாம் அதிகரணம்

**மேற்கோள்:**

இனி, இவ்வான் மாக்களுக்குத் தமது முதல் தானே குருவுமாய் உணர்த்தும் என்றது :

**ஏது:**

அவன் அன்னியமின்றிச் சைதன்னிய சொரூபியாய் நிற்றலான்.

**உதாரணம்:**

மெய்ஞ்ஞானந் தானே விளையும் விஞ்ஞானகலர்க்கு
அஞ்ஞான அச்சகலர்க கக்குருவாய் - மெய்ஞ்ஞானம
பின்னுணர்தது மன்றிப் பிரளயா கலருக்கு
முன்னுணர்ததுந் தான்குருவாய் முன்.

அறிவிக்க அன்றி அறியா உளங்கள்
செறியுமாம் முன்பின் குறைகள் —நெறியின்
குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் [வீடென்
குறைவில்சகன் சூழ்கொள் பவர்க்கு.

இல்லா முலைப்பாலும் கண்ணீரும் ஏந்திழைபால்
நல்லாய் உளவாமால் நீர்நிழல்போல—இல்லா
அருவாகி நின்றானை யாரறிவார் தானே
உருவாகித் தோன்றானேல் உற்று.

## மூன்றும் அதிகரணம்

**மேற்கோள்:**

இனி, இவவான்மாக்கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மையுணரா எனறது:

ஏது :

அவைதாம் பளிங்கிலிட்ட வன்னம் போல் காட்டிற்றைக் காட்டி நிற்றலான்.

உதாரணம் :

பன்னிறங் காட்டும் படிகம்போல் இந்திரியம்
தன்னிறமே காட்டுந் தகைநினைந்து - பன்னிறத்துப்
பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்போய்யா மெய்
மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு. [கண்டான்

## நான்காம் அதிகரணம்

மேற்கோள் :

இனி, இவ்வான்மாத் தன்னை இந்திரியத்தின் வேறுவான் காணவே, தமது முதல் சீபாதத்தையணையும் என்றது:

ஏது :

ஊசல் கயிறற்றால் தாய் தரையேயாந் துணையான்.

உதாரணம் :

சிறைசெய்ய நின்ற செழும்புனலின் உள்ளம்
சிறைசெய் புலனுணர்வின் தீர்ந்து - சிறைவிட்டு
அலைகடலிற் சென்றடங்கும் ஆறுபோல் மீளா(து)
உலைவிலஅரன் பாதத்தை உற்று.

எவ்வுருவந் தானின்னில எய்துவார் இல்லைதான்
இவ்வுருவின் வேறல இறையல்லன் - எவ்வுருவுந்
கண்போல அவயவங்கள காணுஅக் கணணில்லார்
கண்பேறே காணக கழல்.

ஐமபொறியின் அலகையெனும் அந்த தரசிவனை
ஐம்பொறியை விட்டங் கணைசகலன் - ஐம்பொறியின்
நீங்கான்நீர்ப் பாகிபோல் நீங்குமல கன்மம்வரின்
நீங்கானை நீங்கு நினைந்து.

## ஒன்பதாம் சூத்திரம்

ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினில சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
தண்ணிழலாம் பதிவிதி எண்ணுமஞ் செழுத்தே

என்பது சூத்திரம்.

### கருத்துரை :

என்னுதலிற்றோ எனின், ஆன்மசுத்தி பண்ணுமா றுணர்த்துதல் நுதலிற்று.

### வார்த்திகப் பொழிப்பு

### முதல் அதிகரணம்

**மேற்கோள் :**

ஈண்டு, அம்முதலே ஞானக் கண்ணினுற் காண்க என்றது:

**ஏது :**

அவன் வாக்கு மனாதீத கோசரமாய் நிற்றலான்.

**உதாரணம் :**

நாடியோ என்போ நரம்புசீக் கோழையோ
தேடி எனையறியேன் தேர்ந்தவகை - நாடிஅரன்
தன்னலே தன்னையுங் கண்டு தமைக்காணர்
என்னு மெனவறிவார் இன்று.

காட்டிய கண்ணே தனைக்காணு கண்ணுக்குக்
காட்டாய உள்ளத்தைக் கண்காணு - காட்டிய
உள்ளந் தனைக்காணு உளளத்தின் கணணுய
கள்வன்ருன உள்ளத்திற் காண.

# இரண்டாம் அதிகரணம்

**மேற்கோள் :**

இனி, அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்தென்று காண உளதாய் நிற்பது ஞானசொரூபமென் றுணரற்பாற்று.

**ஏது :**

வேற்றியல்பாகிய வன்ன பேதங்களை வேற்றியல் பென்று கண்டு கழிப்பின், உளதாய் நிற்பது படிக சொரூப மாந் துணையான்.

**உதாரணம் :**

நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியா னந்தனாய்த்
தற்பரமாய் நின்ற தனிமுதல்வன் – அற்புதம்போல்
ஆனா அறிவாய அளவிறந்து தோன்றுமே
வானே முதலகளை யின்றி வந்து.

சுட்டி யுணர்வதனைச் சுட்டி யசத்தென்னச்
சட்ட இனியுளது சத்தேகாண் — சுட்டி
உணர்ந்ததற்கு சத்தல்லை உண்மையைத் தைவம்
புணர்ந்ததனற் பொய்விட்டுப் போம்.

கண்டதை அன்றென் றெனவிட்டுக் கண்டசத்தாய்
அண்டனை ஆன்மாவில் ஆய்ந்துணரப் - பண்டணைந்த
ஊனத்தைத் தான்விடுமா றுத்தமனின் ஒண்கருட
சானத்தில் தீர்விடம்போல் தான்.

## மூன்றும் அதிகரணம்

**மேற்கோள்:**

இனி, இவ்விடத்து சீபஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்க என்றது:

**ஏது:**

இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும் அஞ்ஞானத்தை வேம்பு தின்ற புழுப்போல நோக்கிற்றை நோக்கி நிற்குமாதலின், அது நீக்குதற்கெனக் கொள்க.

**உதாரணம்:**

அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டரனை
அஞ்செழுத்தால் அற்சித்து இதயத்தில்-அஞ்
செழுத்தால்
குண்டலியிற் செய்ஓமங் கோதண்டஞ் சானிக்கில்
அண்டனுஞ் சேடனும் அங்கு.

இந்துவிற் பானுவில் இராகுவைக் கண்டாங்குச்
சிந்தையிற் காணிற் சிவன்கண்ணும்—உந்தவே
காட்டாக்கில் தோன்றுக் கனலசேர் இரும்பெனன
ஆட்டானும் ஓதஞ் செழுத்து.

மண்முதல் நாளமலர் வித்தை கலாரூபம்
எண்ணிய ஈசர் சதாசிவமும்—நணணில
கலையுருவாம் நாதமாஞ் சத்திஅதன் கண்ணும்
நிலையதிலாம் அச்சிவன்தாள் நேர்.

# 4. பயனியல்

## பத்தாம் சூத்திரம்

அவனே தானே யாகிய அந்நெறி
ஏக ளுகி இறைபணி நிற்க
மலமாயை தன்ெளடு வல்வினை யின்றே

என்பது சூத்திரம்.

### கருத்துரை

என்னுதலிற்றோ எனின், பாசட்சயம் பண்ணு ம ஈ றுணர்த்துதல் நுதலிற்று.

### வார்த்திகப் பொழிப்பு

### முதல் அதிகரணம்

*மேற்கோள் :*

ஈண்டுப் பரமேசுரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையான் அவனிடத் தேகனுகி நிற்க வென்றது:

*ஏது :*

அவ்வாறு நிற்கவே யான்என தென்னுஞ் செருக்கற்று அவனது சீபாதத்தை யணைதமாகலான்.

*உதாரணம் :*

நானவனென் றெண்ணினர்க்கும் நாடுமுளம்
உண்டாதல்

தானெனஒன் றினறியே தானதுவாய-
நானெனவொன் (று)

இலலென்று தாவே எனுமவரைத தனனடிவைத(து)
இலலெனறு தாளும இறை.

## இரண்டாம் அதிகரணம்

**மேற்கோள் :**

இனி இறைபணி வழுவாது நிற்க வென்றது:

**ஏது :**

அவனருளாலல்லது ஒன்றையுஞ் செய்யானாகவே, அஞ்ஞானகன்மம் பிரவேசியாவாகலான்.

**உதாரணம் :**

நாமல்ல இந்திரியம் நம்வழியின் அல்லவழி
நாமல்ல நாமும் அரனுடைமை - ஆமென்னில்
எத்தனுவில் நின்றும இறைபணியார்க் கில்லைவினை
முற்செய்வினை யுந்தருவான் முன்.

சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல்
சார்ந்தாரைக் காத்தும் சலமிலனாய்ச்-சார்ந்தடியார்
தாந்தானச் செய்துபிறர் தங்கள்வினை தான
கொடுத்தல்
ஆய்ந்தார்முன் செய்வினையும ஆங்கு.

இங்குளி வாங்குங் கலம்போல ஞானிபால்
முன்செய் வினைமாயை மூண்டிடினும் – பின்செய்வினை
மாயையுடன் நில்லாது மற்றவனரும் மெய்ப்
பொருளே
ஆயஅத னலஉணரும் அச்சு.

நண்ணனல் வேவாத நற்றவர் தம்மினும்
பண்ணமர மாச்செலுததும் பாகரினும - எண்ணி
அரனடி ஓர்பவர் ஐம்புலனிற் செனறும்
அவாதிறல நீஙகார் அதறகு.

சதசத்தாம் மெய்கண்டான் சததருளிற் காணின்
இதமித்தல் பாசததில இனறிக - கதமிககு
எரிகதிரின் முன்னிருள்போல ஏலா அசத்தின்
அருகணையார் சத்தணைவார் ஆங்கு.

— ஃ ஃ —

## பதினொன்றும் சூத்திரம்

காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளதனைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே

என்பது சூத்திரம்.

### கருத்துரை

என்னுதலிற்றோ எனின், பரமேசுரனது சீபாதங்களை யணையுமா றுணர்த்துதல் நுதலிற்று.

### வார்த்திகப்பொழிப்பு

### முதல் அதிகரணம்

**மேற்கோள்:**

ஈண்டு, அவனும் அவற்றது விடயத்தை உணரும் என்றது:

**ஏது:**

இவ்வான்மாக்கள் அவனையின்றியமைந் தொன்றையும் விடயியாவாகலான்.

உதாரணம்

ஐந்தையும் ஒக்க உணரார் தவற்றுணர்வது
ஐந்தும்போல நின்றுணரும் ஆகலான் —
ஐந்தினையும்
ஒன்றொன்றாப் பார்த்துணர்வ துள்ளமே எவ்வுலகும்
ஒன்றொன்றாப் பார்க்குமா உணர்ந்து.

ஏகமாய் நின்றே யிணையடிகள் ஒன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினன் — ஏகமாய்
உள்ளத்தின் கண்ணானன் உள்குவார் உள்கிற்றை
உள்ளத்தான் காணானே உற்று.

# இரண்டாம் அதிகரணம்

**மேற்கோள்:**

இனிப் பத்தியினுன் மறவாதேத்த அவனது சீபாதத்தை யணையுமொன்றது:

**ஏது :**

அவன் அன்னியமின்றிச் செய்வோர் செய்திப்பயன் விளைத்து நிற்றலான.

**உதாரணம் :**

அருக்கன்நேர் நிற்பினும் அல்லிருளே காணார்க்(கு)
இருட்கண்ணே பாசத்தார்க்(கு) ஈசன்-அருட்கண்ணால்
பாசததை நீக்கும் பகலலர்த்துந் தாமரைபோல்
நேசத்தில் தன்னுணர்ந்தார் நேர்.

மன்னும் இருளை மதிதுரந்த வாறன்பின்
மன்னும அரனே மலந்துரந்து — தன்னின்
வலித்திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல்
சலிப்பில் விகாரியலன் தான்.

நசித்தொன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்று
நசித்தலதேல் ஒன்றுவ தில்லை — நசித்துமலம்
அப்பணைந்த உப்பின் உளமணைந்து சேடமாம்
கப்பின்றும் ஈசன் கழல்.

பொன்வாள்முன் கொண்மூவிற் புக்கொடுங்கிப் போயகலத்
தன்வாளே எங்குமாந் தன்மைபோல் —முன்வாள்
மலத்தின் மறைந்துள்ளம மற்றுலகை உண்ணும்
மலத்திரித்துச் செல்லும் வரத்து.

## பன்னிரண்டாம் சூத்திரம்

செம்மலர் நோன்றாள் சேரல் ஒட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே

என்பது சூத்திரம்.

### கருத்துரை

என்னுதலிற்றோ வெனின், அசிந்திதனாய் நின்ற பதியைச் சிந்திதனாகக் கண்டு வழிபடுமா றுணர்த்துதல் நுதலிற்று.

### வார்த்திகப் பொழிப்பு

### முதல் அதிகரணம்

**மேற்கோள்:**

ஈண்டு, ஆணவம் மாயை கான்மியம் என்னும் மலங்களைக் களைக என்றது:

**ஏது:**

அவைதாம் ஞானத்தை யுணர்த்தாது அஞ்ஞானத்தை யுணர்த்து மாகலான்.

**உதாரணம்:**

புண்ணிய பாவம் பொருந்துமிக் கான்மியமும்
மண்முதல் மாயைகிரண் மாயையும்—கண்ணிய
அஞ்ஞானங் காட்டுமிவ் வாணவமும் இம்மூன்றும்
மெய்ஞ்ஞானிக் காகா விடு.

### இரண்டாம் அதிகரணம்

**மேற்கோள்:**

இனிச் சிவபத்தர்களோ டிணங்குக என்றது:

**ஏது:**

அல்லாதார் அஞ்ஞானத்தை யுணர்த்துவ ராகலான்.

**உதாரணம்:**

மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ்
சிறப்பிலார் தந்திறத்துச் சேர்வை — அறப்பித்துப்
பத்தர் இனத்தாய்ப் பரனுணர்வினுல உணரும்
மெய்த்தவரை மேவா வினை.

## மூன்றும் அதிகரணம்

**மேற்கோள்:**

இனிப் பத்தரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமேசுரனெனக் கண்டு வழிபடுக வென்றது:

**ஏது:**

அவன் மற்றிவவிடங்களில் பிரகாசமாய் நின்றே அல்லாத இடத்து அப்பிரகாசமாய் நிற்றலான்.

**உதாரணம் :**

தன்னுணர வேண்டித் தனதுருவைத் தான்கொடுத்துத்
தன்னுணரத் தன்னுள் இருத்தலால்— தன்னுணரும்
நேசத்தார் தமபால் நிகழுந் ததிநெய்போல்
பாசத்தார்க்கு இன்றும் பதி

கண்டதொரு மந்திரத்தாற் காட்டத்தில் அங்கிவேறு
உண்டல்போல் நின்றங் குளதாமால்—கண்டஉருத்
தானதுவாய் அனருனன் தானதுவாய்த் தோன்றுனே
தானதுவாய்க் காணுந் தவர்கு.

**மேற்கோள்:**

இனி இவ்விடங்களில் வழிபடுக என்றது:

**ஏது:**

நரம்பு நாடி முதலானவற்றைத் தானதுவாய் வரும் புருடன் அவையாகாவாறு அப்புருடனுமாகலான.

உதாரணம் :

அதுஇது என்ற ததுவல்லான் கண்டார்க்(கு)
அதுஇது என்றதையும் அல்லான் - பொதுவதனில்
அத்துவித மாதல அகண்டமுந் தைவமே
அத்துவிதி அன்பிற ஞெழு.

வினையால் அசத்து விளைதலாவ ஞானம்
வினைதீரி னன்றி வினையா - வினைதீர
ஞானத்தை நாடித் தொழவே அதுநிகழும்
ஆனத்தால் அன்பின் தொழு.

தன்னை யறிவித்துத் தான்ருனுச் செய்தானைப்
பினனை மறத்தல் பிழையலது – முன்னவனே
தானேதா ஞுச்செய்தும் தைவமென்றுந் தைவமே
மானே தொழுகை வலி.

சிவஞானபோதம் முற்றிற்று.

— ஃ ஃ —

## இந்நூற்கு அதிகாரிகள்

சிவமென்னும் அந்தத்ர சிந்தைநேர் நோக்கப்
பவமின்ரும கண்வா சகத்திற் சிவமுண்டாம்
ஒன்றும் இரணடும் மறந்தார்க்கிங் கொண்குருவால்
இன்றிநநூல் முமளம் மலர்கசு.

— ஃ ஃ —

## சிறப்புப் பாயிரம்

எந்தை சனற்குமரன ஏத்தித தொழ இயல்பாய்
நந்தி யுரைத்தருளும் ஞானநூல - சிந்தைசெய்து
தானுரைத்தான மெய்கண்டான் தாரணியோர்
தாமுணர
ஏதுதிருட் டாந்தத்தால் இன்று.

திருச்சிற்றம்பலம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சூர்ணிக் கொத்து



## முதற் சூத்திரம்

1. சகம் பிறப்பு இருப்பு இறப்பாகிய முத்தொழிலை யுடையது.
2. அஃது அரனாலே உடையது.
3. முதல்வன் ஒருவனே.

## இரண்டாம் சூத்திரம்

1. அரன் உயிர்களின் இரண்டற நிற்பன்.
2. உயிர்களுக்குக் கன்மமலனை அரனே கொடுப்பன்.
3. உயிர்கள் இறந்து பிறந்து வரும்.
4. அரன் தன் சத்தியோடு உடனாயுளன்.

## மூன்றாம் சூத்திரம்

1. இல்லையென்கின்ற அறிவுடனே சொல்லுகையினாலே அறிவுயிர் உண்டு.
2. எனது உடல் என்று பொருட்பிறிதின் கிழமையாகச் சொல்லுகையினாலே, உடற்கு வேறாய் உயிருண்டு.
3. ஐந்தையும் ஒருவனே அறிதலின், ஒவ்வொன்றை மாத்திரம் அறிகிற ஐந்திற்கும் வேறாய் உயிர் உண்டு.

4. கனவுடலை விட்டு நனவுடலிலே வருகையினாலே, அக் கனவுடற்கு வேறாய் உயிர் உண்டு.

5. நித்திரையிலும் பிராணவாயுத் தொழில் பண்ணவும் சரீரத்துக்குப் புசிப்புந் தொழிலும் இல்லாதபடியினாலே, பிராணவாயுவுக்கு வேறாய் உயிர் உண்டு.

6. மறந்து மறந்து நினைக்கிறபடியினாலே மறவாமல் இருக்கிற அரனுக்கு வேறாய் உயிர் உண்டு.

7. எல்லாத் தத்துவங்களுக்கும் வேறு வேறு பெயர் இருக்கையினாலே, அந்தந்தத் தத்துவங்களுக்கு வேறாய் உயிர் உண்டு.

## நான்காம் சூத்திரம்

1. அந்தக்கரணங்களுக்கு உயிர் உட்கூடினாலன்றித் தொழில் இல்லாதபடியினாலே, அந்தக்கரணங்களுக்கு வேறாய் உயிர் உண்டு.

2. மலமறைப்பால் உயிருக்கு அறிவு இல்லை.

3. உயிர் மூன்றவைத்தைப்படும். ஒவ்வொன்றும் ஐவகைப்படும்.

## ஐந்தாம் சூத்திரம்

1. உயிராலே தத்துவங்களெல்லாம் தொழில் செய்யும்.

2. அரனாலே உயிர்களெல்லாம் அறியும்.

## ஆறுஞ் சூத்திரம்

1. உயிரறிவினாலே அறியப்பட்டவெல்லாம் அழியும்.

2. அப்பிரமேயமாக அறியப்பட்டவனே அரன்.

## ஏழாம் சூத்திரம்

1. அரன் பாசத்தை அனுபவியான்.

2. பாசம் அரனை அனுபவியாது.

3. உயிர் அவ்விரண்டையும் அனுபவிக்கும்.

## எட்டாம் சூத்திரம்

1. உயிருக்கு நல்லறிவு தவத்தினாலே வரும்.

2. உயிருக்குச் சற்குருவாயி வருவது அரனே.

3. உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுகையினாலே தன்னையும் அறியமாட்டாது.

4. உயிர் பஞ்சேந்திரியங்களிலே பற்றற்றால, தன்னையும் தலைவனையும் அறியும்.

## ஒன்பதாம் சூத்திரம்

1. உயிர் அரன் ஞானத்தினாலே அரனைக் காணும்.

2. உயிர் பாசத்திலே பற்றற்றால, அரன் ஞானம் வெளிப்படும்.

3. பஞ்சாட்சரசெபம் பண்ணினால் வாசனாமலம்போம்.

## பத்தாம் சூத்திரம்

1. அரனுடன் ஒன்றாகி நில்: மலவாதனை நீங்கும்.
2. உன் தொழிலெல்லாம் அரன் பணி என்றே கொள்: மாயை இருவினைகள் தாக்கா.

## பதினொன்றாம் சூத்திரம்

1. ஞானிக்கு வருகிற விடயங்களை அரனே ஒன்று கொள்வன்
2. அரனை மறவாமல் அன்பு இருந்தால் அவனிடத்திலே ஐக்கியமாய்ப்போவன்.

## பன்னிரண்டாம் சூத்திரம்

1 மும்மலங்களையுங் களைக.
2. சிவஞானிகளுடனே கூடுக.
3. சிவஞானிகளையுஞ் சிவலிங்கத்தையுஞ் சிவனெனவே தேறி வழிபடுக.
4, குருலிங்க சங்கமத்தை வழிபடாமையை ஒழிக.

திருச்சிற்றம்பலம்